REGD No. TN MS (C) 244

ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS)

Phone: 812818 4 பக்கம் விலை 30 காசு




# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்




மலர்: 3 சென்னை 13—9—1979 வியாழன் (★)❋●❋(✶) வெளியூர் 14-9-1979 வெள்ளி இதழ்: 326

# பேச்சுவார்த்தையில் கழகத் தலைவர்கள் பங்கேற்பு:

# புரட்சித்தலைவருடன்-கருணாநிதி பட்நாயக் சந்திப்பு

## தனியாக முதல்வருடன் கருணாநிதி 30 நிமிடம் பேச்சு

சென்னை, செப். 13- முதல்வர் புரட்சித் தலைவர், மத்திய அமைச்சர் பிஜு பட்நாயக், தி. மு. க. தலைவர் கருணாநிதி ஆகியோர் இன்று சந்தித்துப் பேசினர்.

இந்தச் சந்திப்பின்போது கழக பொதுச் செயலாளர் டாக்டர் நாவலர், நிதியமைச்சர் நாஞ்சிலார், மின்சாரத் துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் ஆகியோரும் உடன் இருந்தனர்.





மத்திய உருக்கு மற்றும் சுரங்க இலாகா அமைச்சர் பிஜு பட்நாயக் நேற்று சென்னை வந்து முதல்வர் புரட்சித் தலைவரையும் கருணாநிதியையும் தனித்தனியே சந்தித்துப் பேசினார் அல்லவா?

சேப்பாக்கம் அரசினர் விடுதியில் இன்று பட்நாயக் முதல்வர் புரட்சித் தலைவரையும் கருணாநிதியையும் சந்தித்தார்.

அரசினர் விருந்தினர் விடுதிக்கு இன்று பகல் 11 மணிக்கு கழக பொதுச் செயலாளர் டாக்டர் நாவலர் மின்சாரத்துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் ஆகியோர் வந்தனர்.

11-05 மணிக்கு நிதியமைச்சர் நாஞ்சிலார் வந்தார்,

11-10-க்கு தி. மு. க. தலைவர் கருணாநிதி வந்தார்.

11-15க்கு முதல்வர் புரட்சித்தலைவர் வந்தார்.

அதன்பின்னர் தி.மு.க. பொதுச் செயலாளர் அன்பழகன் ஆர். டி. சீதாபதி ஆகியோர் வந்தனர்.

புரட்சித் தலைவருடனும் கருணாநிதியுடனும் பட்நாயக் பேசிக்கொண்டிருந்தார்.

பேச்சுவார்த்தையில் அனைவரும் கலந்து கொண்டனர்.

எல்லோருமாகப் பேச்சு நடத்தினார்கள்.

பின்னர் முதல்வர் புரட்சித்தலைவரும் கருணாநிதியும் அரை மணி நேரம் தனியாகப் பேசிக் கொண்டிருந்தனர்.

பின்னர் முதல்வர் புரட்சித் தலைவர் நிருபர்களிடம் கூறுகையில் "சில அடிப்படைப் பிரச்சினைகள் பற்றிப் பேசினோம். கழக செயற்குழு பொதுக்குழுவையும் கூட்டி அவர்களின் கருத்தையும் அறிந்து அதன்பின் மீண்டும் பேசுவோம்" என்று குறிப்பிட்டார்.

## தற்கொலைப்பாதையில் செல்லும் காங்கிரஸ்: இந்திராகாந்தி தாக்கு

புதுடெல்லி, செப். 13- தேவராஜ் அர்ஸ் தலைமையிலான காங்கிரஸ் கட்சி தற்கொலைப் பாதையில் செல்வதாக இந்திராகாந்தி குறிப்பிட்டார்.

அகில இந்திய இ.காங்கிரசின் ஒரு நாள் மாநாடு டெல்லியில் நடந்தது.

அந்த மாநாட்டில் இந்திராகாந்தி பேசுகையில் கூறியதாவது:

ஜனதாக் கட்சியில் இணைந்தபோது ஸ்தாபன காங்கிரஸ் தற்கொலை செய்து கொண்டது.

பொதுவான தலைவரை (சரண்சிங்கை) ஏற்றுக்கொண்டதுடன் ஜனதா (எஸ்) கட்சியின் சின்னத்தையும் ஏற்று கொண்டதால்காங்கிரஸ்(எஸ்) அதே தற்கொலைப் பாதையில் போய்க் கொண்டிருக்கிறது.

எங்கள் கட்சிதான் சுதந்திரத்துக்குப் போராடிய உண்மையான காங்கிரஸ். காங்கிரசின் மரபுகளைக் கட்டிக்காத்து வருவதும் இதுவே. பல தலைவர்கள் மீண்டும் இ. காங்கிரசில் சேருவதால் இதனைபொது மக்களும் உணருவார்கள்.

ஜெகஜீவன்ராம் பிரதமர் ஆவதற்கு இ. காங்

(1-ம் பத்தி பார்க்க)

## தாம்பரம் நகரில் பெரியார் அண்ணா பிறந்தநாள் விழாக்கள்

சென்னை, செப். 13- தாம்பரம் நகர கழகத்தின் சார்பில் தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா பிறந்த நாள் விழாக்கள் வரும் 15-ந் தேதி காலை 10 மணிக்கு தாம்பரம் பாரதி திடலில் ஏ. செல்லமுத்து தலைமையில் எல்ல. ராசமாணிக்கம் கொடியேற்றி வைக்கிறார்.

புலவர் ஏ. க. மணி, சேது அன்பரசன், ஏகாம்பரம், ஐசக் சாமுவேல் கலியபெருமாள், ஜமால், ராஜு, பக்கிரி, வேணு முனியாண்டி மற்றும் பலர் கலந்துகொள்வர்.

## வானொலி டி.வி.யில் தேர்தல் பிரசாரம்

புதுடெல்லி, செப். 13- வானொலியிலும், தொலைக் காட்சியிலும் அரசியல் கட்சிகளுக்கு நேரம் ஒதுக்கும் விஷயம் குறித்து மத்திய அரசுடன் தேர்தல் கமிஷன் தொடர்பு கொள்ளும் என்று பிரதம தேர்தல் கமிஷனர் ஷக்தா கூறினார்.

பல்வேறு அரசியல் கட்சி பிரதிநிதிகளுடன் தேர்தல் கமிஷனர் நேற்று பேச்சுவார்த்தை நடத்தினார்.

இந்தப் பேச்சு வார்த்தை சுமார் 90 நிமிட நேரம் நடந்தது.

இந்தக் கூட்டத்தில் பல்வேறு உடன்பாடுகள் ஏற்பட்டன.

வருகிற தேர்தலின் போது அரசியல் கட்சிகள் வானொலியிலும் தொலைக்காட்சியிலும் பிரச்சாரம் செய்ய நேரம் ஒதுக்குவது பற்றி மத்திய அரசுடன் தேர்தல் கமிஷன் தொடர்பு கொள்ளும்.

தகராறு தீரும் வரை ஏர் உழவன் சின்னத்தை ஜனதாக் கட்சி பயன்படுத்த உரிமை இருக்கிறது என்றும் தேர்தல் கமிஷனர் கூறினார்.

வாக்காளர் பதிவு தேதியை மேலும் ஒரு வாரம் நீடிக்க அரசியல் கட்சிகள் விரும்பினால் இதனை தேர்தல் கமிஷன் பரிசீலிக்கும் என்றும் அவர் கூறினார்.

வாக்காளர்களுக்கு அடையாள சீட்டு வழங்குவதை அந்தக் கூட்டத்திற்கு வந்த பிரதிநிதிகள் எதிர்த்தனர்.

(6-ம் பத்தி தொடர்ச்சி)

கிரஸ் முட்டுக்கட்டையாக இருக்கவில்லை.

ஜனதா கட்சிக்கு மெஜாரிட்டி இருந்தபோது அரிஜனத் தலைவரான ஜெகஜீவனை ஜனதாக் கட்சியே பிரதமராகத் தேர்ந்தெடுக்கவில்லை.

## அரசியல் சூழ்நிலையில் திடீர்திருப்பம்

# பிரதமர் சரண்சிங் சென்னைவருகை

## முதல்வர் புரட்சிதலைவரை சந்திக்கிறார்

புதுடெல்லி, செப். 13- பிரதமர் சரண்சிங் வருகிற 29-ம் தேதி சென்னை வருகிறார். அவர் முதல்வர் புரட்சித் தலைவரைச் சந்தித்து அரசியல் நிலை குறித்து பேசுவார் என்று தெரிகிறது.

நாடாளுமன்றத்தைக் கலைத்து குடியரசுத் தலைவர் இடைத் தேர்தலுக்கு உத்தரவிட்டதும் நாடெங்கும் அரசியல் கட்சிகள் தேர்தல் களத்தில் இறங்க ஆயத்தம் செய்யத் தொடங்கிவிட்டன.

தமிழகத்தில் மக்களின் பேராதரவையும், பெருமதிப்பையும் பெற்ற புரட்சித்தலைவரின் ஆதரவையும் அனைத்துத் தரப்பினரின் நம்பிக்கையையும் நல்லெண்ணத்தையும் பெற்ற மாபெரும் இயக்கமான அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகத்தின் தலைமையிலான அணியில் சேரவும் பல கட்சிகள் போட்டி போட்டு முந்துகின்றன.

சரண்சிங் ஜனதா கட்சியும், தேவராஜ்அர்ஸ் தலைமையிலான காங்கிரஸ் கட்சியும் முயன்று வருகின்றன.

அண்மையில் முதல்வர் புரட்சித்தலைவர் டெல்லி சென்றிருந்தார். அங்கு அவர் பிரதமர் சரண்சிங்கையும் சந்தித்துப் பேசினார்.

புரட்சித்தலைவர் சென்னைக்கு வந்த பின்பு நேற்று மத்திய உருக்கு அமைச்சர் பட்நாயக் சரண்சிங்கின் ஆதுவராக சென்னைக்கு வந்து முதல்வரைச் சந்தித்து பேச்சுவார்த்தை நடத்தினார்.

பிரதமர் சரண்சிங் சென்னைக்கு 29 ஆம் தேதி தமிழகத்தில் சுற்றுப்பயணம் செய்ய இருப்பதாகவும், முதல்வர் புரட்சித் தலைவரைச் சந்தித்து தற்போதைய அரசியல் நிலை குறித்து பேச்சுவார்த்தை நடத்துவார் என்றும் டெல்லியில் விபரமறிந்த வட்டாரங்கள் கூறுகின்றன.

## ஜெகஜீவனுக்கு எஸ்.கே.பட்டீல் அழைப்பு

புதுடெல்லி, செப். 13- சமீபத்தில் இ.காங்கிரஸ் கட்சியில் சேர்ந்த எஸ். கே. பட்டீல் இ. காங்கிரஸ் மாநாட்டில் இன்று பேசினார்,

ஜனதாக்கட்சித் தலைவர் ஜெகஜீவன்ராம் இ. காங்கிரசில் சேரவேண்டும் என்று எஸ். கே. பாட்டீல் அழைப்பு விடுத்தார்.

# வறுமையை ஓட்டும் முயற்சிக்கு மாணவர் ஒத்துழைப்பு அவசியம்

### அமைச்சர் காளிமுத்து பேச்சு

மதுரை, செப். 13-வறுமையில் வாடக்கூடியவர்கள் பலர் தமிழகத்தில் உள்ளனர். அவர்கள் கண்ணீரைத் துடைக்கும் நன்முயற்சிக்கு மாணவர்கள் முன்நின்று உழைத்தாக வேண்டும் என்று அமைச்சர் காளிமுத்து கோரினார்.

மதுரை செந்தமிழ்க் கல்லூரி பேரவைத் துவக்க விழாவும்,முதுகலைவகுப்புத் துவக்க விழாவும் நேற்று நடைபெற்றது.

கல்லூரிபேரவைத்தலைவர் அய்யரு என்ற அன்பழகன் தலைமை வகித்தார்.

உள்ளாட்சித் துறை அமைச்சர் கா. காளிமுத்து பேரவையையும், முதுகலை வகுப்பையும் துவக்கி வைத்து சிறப்புரையாற்றினார்.

கல்லூரி முதல்வர் இரா. வே. நாராயணன் வாழ்த்துரை வழங்கினார்.

செல்வி மணிமேகலை நன்றி கூறினார்.

அமைச்சர் கா. காளிமுத்து பேசியதாவது:

தமிழால்தான் தமிழகம் வாழும், உய்யும் என்ற வகையில் தமிழைக் கற்க வேண்டும்.

### தமிழின்பால் அன்பு

தமிழ் அறிவு மட்டும் போதாது. தமிழின்மீது அன்பும் வேண்டும்.

உலக மொழிகளுக்கு இல்லாத 16 வகை சிறப்புகள் தமிழுக்கு உண்டு. உலகத்தார் நம்மிடம் கற்றுக் கொள்வதற்கு இலக்கியச் செல்வங்கள் நம்மிடம் ஏராளமாய் இருக்கின்றன,

ஐக்கிய நாடுகள் சபையில் இந்தியில் ஒருவர் பேசுகிறார். அவருக்கு ஆங்கிலமும் தெரியும். இருந்தும் இந்தியில் பேசுகிறார்.

இந்துமதத் தலைவர்கள் காசியில் கூடினார்கள், உருது மொழிக்குப் பதிலாக இந்தியைப் பரப்ப திட்டம் தீட்டினார்கள், அதன் விளைவுதான்பாகிஸ்தான்.

தமிழ் வளர்ந்திருக்கிறது. தமிழகம் இன்னும் ஏழ்மையாக இருக்கிறது. இந்திய ஏழைகளில் 10-ல் ஒருவர் தமிழகத்தை சேர்ந்தவர்.

வறுமையில் வாடக்கூடியவர்கள் தமிழகத்தில் ஏராளம். ஆண்டுக்கு ரூபாய் மூன்றுஆயிரத்துக்கும் கீழே சம்பாதிப்பவர்கள்தமிழகத்தில் இரண்டரைக் கோடி பேர் இருக்கிறார்கள்.

அவர்கள் கண்ணீரைத் துயரைத் துடைப்பது மனிதாபிமானமிக்கோர் கடமை. அப்படிப்பட்ட நன்முயற்சிக்கு மாணவர்கள் முன் நின்று உழைத்தாக வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து பேசினார்.

விழாவில் கல்லூரிச் செயலாளர் டி. பி. எம். பெரியசாமி எம். எல். ஏ. தாளாளர் மா. தனுக்கோடி பாண்டியன் ஆகியோரும் கலந்து கொண்டனர்.

# அதே மேடை: ஆனால் தலைவர்கள் வேறு

பெங்களூர்,செப். 13- பெங்களூரில் காங்கிரஸ் மாநாடு நடக்கிறது.

சரித்திரமுக்கியத்துவம் வாய்ந்த பல சம்பவங்கள் நடந்ததெல்லாம் இந்த பெங்களூர் கண்ணாடி மாளிகையில் தான்.

நேற்றும் இன்றும் நடைபெறும் அகில இந்திய காங்கிரஸ் மாநாட்டையொட்டி லால்பாக் கண்ணாடிமாளிகைப்பகுதி அலங்காரம் செய்யப்பட்டிருந்தது.

"குழப்பத்திலிருந்து நாட்டைக் காப்போம்" "ஜனநாயகத்தைக்காக்க அனைவரும் ஒன்றுபடுவோம்" என்ற பிரதான முழக்கங்களுடன் மாநாடு நடக்கிறது.

மாநாட்டில் சுவரண் சிங் பேசுகையில் 'இந்த கண்ணாடி மாளிகையில் நடந்த பல காங்கிரஸ் மாநாடு சரித்திர முக்கியத்துவம் வாய்ந்ததாக அமைந்திருக்கின்றன' என்றார்.

10 ஆண்டுகளுக்குமுன் இந்த இடத்தில் காங்கிரஸ் மாநாடு நடந்தது.

அதேபோன்ற மாநாடுதான் இப்போதும் நடக்கிறது.

1969ல் நடந்த மாநாட்டுக்கு நிஜலிங்கப்பா தலைமை வகித்தார்.

பெருந்தலைவர் காமராஜர், இந்திராகாந்தி, மொரார்ஜி தேசாய், ஜெகஜீவன்ராம், எஸ். கே. பட்டீல், அதுலிய கோஷ், ஒய். பி. சவாண் ஆகியோர் அந்த மாநாட்டு மேடையில் அமர்ந்து இருந்தனர்.

ஆனால் இப்போது நடக்கும் மாநாட்டு மேடையில் முன்பிருந்த தலைவர்களில் ஒய். பி. சவான் மட்டுமே அமர்ந்திருந்தார்.

1969 காங்கிரஸ் மாநாட்டுக்குப் பின் காங்கிரஸ் பிளவுபட்டது தெரிந்ததே.

## அணுசக்தி இலாகா கனரக நீர் திட்டம்

விளம்பர எண் 21-79

தமிழ்நாடு, தூத்துக்குடியிலுள்ள கனரக நீர் திட்டத்திற்குஐந்துதுணைபாதுகாப்பு அதிகாரி தற்காலிக பதவிகளுக்கு விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன. சம்பள விகிதம்: ரூ 425-15-500-EB-15-560-20-700 மற்றும் வழக்கமான அலவன்ஸுகள் குறைந்த பட்சயோக்ய தாம்சங்கள் மற்றும் அனுபவம்: அங்கீகரிக்கப்பட்ட பல்கலைக் கழகத்திலிருந்து பெற்ற பட்டப் படிப்பு மேலும் குறிப்பாக அரசாங்க இலாகாக்களில் பாதுகாப்பு அலுவல்களில் குறைந்தபட்ச இரண்டு ஆண்டு அனுபவம். பாதுகாப்பு அலுவல்களில் (Secur ty Functions) போதுமான அளவு அனுபவமும் அல்லது நன்கு அறிந்தவராக இருக்க வேண்டும். மாஜி ராணுவத்தினருக்கு முதலிடம்வழங்கப்படும். தீயணைப்பு வேலைகளில் பயிற்சி/அனுபவமும் மற்றும் மோட்டார் வாகனங்கள் ஓட்டுவதில் நல்ல தேர்ச்சியும், டிரைவிங் லைசென்ஸ் பெற்றுள்ளவர்கள் அதிகபட்ச தகுதியுடையவர்களாகக் கருதப்படுவார்கள்.

இந்தப் பதவிகள் தொழில் நிறுவனங்களைச் சேர்ந்ததாகும். உண்மையிலேயே தகுதி வாய்ந்த விண்ணப்பதாரர்களுக்கு உயர்ந்தபட்சதுவக்க சம்பளம் அளிக்கப்படும்.

ஒரு வெள்ளைத் தாளில், கீழ்காணும்விவரங்களைடைச் செய்து, நிர்வாக அதிகாரி, கனரக நீர்திட்டங்கள், அணுசக்தி இலாகா, ரிச்சர்ட்ஸன் & க்ருதாஸ் பில்டிங், 5வது மாடி, பைகுல்லா, பம்பாய்-400 008 அவர்கள் விலாசமிட்டு 1979, செப்டம்பர் 25ம் தேதிக்கு முன்னதாக கிடைக்கும்படி அனுப்பி வைக்க வேண்டும்.

1. விளம்பர எண் மற்றும் விண்ணப்பிக்கும் தொழில்.
2. முழுப்பெயர் (முதற் பெயருடன் கொட்டை எழுத்துக்களில்) 3. தகப்பனாரின் பெயர். 4. பிறந்த தேதி. 5. தேசிய இனம். 6. திருமணமானவர்/ தனி நபர். 7. நிரந்தர வீட்டு விலாசம். 8. கடிதப்போக்கு வரத்துக்கான விலாசம். 9. தாழ்த்தப்பட்ட/ மலைஜாதி இனத்தைச் சேர்ந்தவர்களா (எனின், ஜாதியின் / மலைஜாதி பிரிவின் பெயர் தெரிவிக்கவும்)
10. பட்டப்படிப்புயோக்ய தாம்சங்கள்- தொழில் நுட்ப கல்வி உட்பட, பல்கலைக் கழகம் அல்லது போர்டின் பெயர், வெற்றி பெற்ற வருடம், தேர்வு பெற்ற விவரங்கள், தேர்வில் கிடைத்த வகுப்பு/Distinction
11. தற்போதுள்ள பதவி பற்றிய விவரங்கள், அவ்வப் போது சம்பளம் பற்றிய விவரங்கள் (தொழில் நிறுவனத்தின் பெயர், எவ்வளவு காலமாக பணிபுரிகின்றனர், வேலை பற்றிய விவரங்கள், வெளியேறியதற்கான காரணம்)
12. பென்ஷன் பெறுபவர்கள் அதுகுறித்து விவரங்கள் எழுதவும்.
13. (சொந்தக்காரர்கள் அல்லாத) இரண்டு நபர்களின் (Referces) பெயர் மற்றும் விலாசம்.
14. அணுசக்தி இலாகா அல்லது அதன் சம்பந்தப்பட்ட யூனிட்டுகளில் பதவியில் உள்ள விண்ணப்பதாரர்களின் சொந்தக்காரர் பெயர், பதவியின் பெயர், யூனிட் முதலியவற்றின் விவரங்கள்.
15. இணைக்கப்பட்டுள்ள போஸ்டல் ஆர்டர்களின் மதிப்பு மற்றும் நெம்பர்.
16. இணைக்கப்பட்டுள்ள பத்திரங்களின் விபரம்.
17. விண்ணப்பதாரர், தன் விண்ணப்பத்திற்குஆதரவாக கொடுக்க விரும்பும் மற்ற விவரங்கள்.

விண்ணப்பங்களுடன் கீழே குறிப்பிட்டுள்ளவற்றிற்கான (1) மதிப்பெண்கள் மற்றும் நற்சான்றிதழ்களின் நகல்கள் (மூலப்பிரதிகள் அல்ல) இணைத்துஅனுப்பவேண்டும். (i) கல்வி யோக்யதாம்சங்கள் (ii) பிறந்ததேதி (iii) அனுபவம் (iv) தாழ்த்தப்பட்ட மலைஜாதி இனத்தைச் சேர்ந்தவர்களா (sc-st விண்ணப்பதாரர்களுக்குமட்டுமே செல்லுபடியாகும்)(v)ராணுவத்திலிருந்து வெளியேறியதற்கான சர்டிபிகேட் (மாஜி ராணுவத்தினருக்குமட்டும்) ஆகியவை யாராவது ஒருமத்திய மாநில அரசின் கெஜட்பதிவு பெற்ற அதிகாரியினுல் ஒப்புதல் பெறப்பட வேண்டும். (2) மத்தியமாநில அரசின் கெஜட் பதிவுபெற்ற அரசாங்க அதிகாரியிடமிருந்து Character) குண நலன்களுக்கான நற்சான்றிதழின் (ஒரிஜினல்) (3) ரூ. 2க்கு கோடிட்ட இந்தியன் போஸ்டல் ஆர்டர் (திரும்பப்பெற முடியாது) (sc/st விண்ணப்பதாரர்களுக்கு கால்பாகம்) அக்கவுண்ட்ஸ் ஆபீஸர், கனரக நீர்திட்டம், அவர்கள் சார்பில் எடுத்து அனுப்ப வேண்டும். ஊனமுற்ற மாஜி ராணுவத்தினர் மற்றும் போரில் உயிர்நீத்த ராணுவத்தினரைச் சார்ந்தவர்கள் தங்கள் விண்ணப்பத்துடன், போஸ்டல் ஆர்டர்கள் இணைத்துஅனுப்புவதிலிருந்து விதிவிலக்கு அளிக்கப்படுகிறுர்கள் மற்ற விஷயங்கள் சமமானவை. sc/st-, விண்ணப்பதாரர்கள், மாஜிராணுவத்தினர், உடல் ஊனமுற்ற ராணுவத்தினர் உடல் ஊனமுற்றவர்கள் போரில் உயிர் நீத்த ராணுவத்தினரின் சொந்தக்காரர்கள் ஆகியோர் விரும்பப்படுவர் குறிப்பிட்ட அனுபவத்துடன் sc/st விண்ணப்பதாரர்கள் கிடைக்கவில்லையெனில் அவர்கள் விஷயத்தில் குறிப்பிட்ட அனுபவ காலம் தளர்த்தப்படும். விண்ணப்பதாரர்கள் மருத்துவ சோதனையில்தேர்ந்தெடுக்கப்பட்ட பின்னரே பதவியில் அமர்த்தப்படுவார்கள். சரிவர பூர்த்தி செய்யப்படாத விண்ணப்பங்களும் தவருன போஸ்டல் ஆர்டர்கள் இணைத்து வரும் விண்ணப்பங்களும் நிராகரிக்கப்படும். அது குறித்து எந்தவித கடிதப் போக்கு வரத்தும் வைத்துக் கொள்ளப்பட மாட்டாது. ஏற்கனவே அரசாங்கஅல்லதுஇதரபொதுத் துறை நிறுவனங்களில் பணிபுரிபவர்கள் தங்கள்விண்ணப்பங்களை தங்கள் மேலதிகாரிகள் மூலமாக அனுப்ப வேண்டும்.

தேர்வு/நேர்முக தேர்வு ஆகியவற்றிற்குவருவதற்காக எவ்வித பிரயாண அலவன்சும் அளிக்கப்படமாட்டாது. எனினும், தாழ்த்தப்பட்ட/ மலைஜாதி இனத்தவர்களுக்கு மட்டும் தேர்வு/நேர்முகதேர்வுக்கு அழைக்கப்பட்டால் விதிகளுக்குட்பட்டு போகவர ரெயில் கட்டணம் வழங்கப்படும்.

davp-645(213)79

# தேர்தலில் நிற்க இந்திராவுக்கு தடை போட முடியுமா?

## தேர்தல் கமிஷனர் பேட்டி

புதுடெல்லி, செப். 13- தேர்தலில் நிற்க இந்திரா காந்திக்கு தடை போட முடியுமா என்பது பற்றி தலைமை தேர்தல் கமிஷனர் ஷக்தர் விளக்கம் அளித்தார்.

தேர்தல் கமிஷனர் ஷக்தர் நிருபர்களுக்கு பேட்டி அளித்தார். அப்போதுஅவர் கூறியதாவது

ஒருவர் மீது கோர்ட்டில் வழக்கு நடக்கிறது என்பதால் மட்டும் அவரைத் தேர்தலில் நிற்காதபடி தடை செய்ய முடியாது என்பதே தற்போதைய சட்டப்படி உள்ள நிலைமையாகும்.

ஒரு நபர் கோர்ட்டில் தண்டிக்கப்பட்டு பின்னர் அவர்மேல்கோர்ட்டுக்குஅப்பீல் செய்திருந்தால் அவர் தேர்தலில் நிற்க முடியும்.

ஏனெனில் அவரது அப்பீல் மேல் கோர்ட்டின் பரிசிலனையில் இருக்கிறது என்ருல். அப்பீல் முடியும் வரை தண்டனை நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது என்று அர்த்தமாகும்.

ஒரு விசாரணைக் கமிஷன் ஒரு நபரைக் கண்டித்துள்ளது என்பதை அடிப்படையாகக்கொண்டு அந்த நபரைத் தேர்தலில் நிற்காதபடி தடை செய்ய சட்டத்தில் ஷரத்து எதுவும் இல்லை.

இவ்வாறு ஷக்தர் நிருபர்களிடம் கூறினர்.

## 19 எச் பஸ்: அமைச்சர் பொன்னையன் துவக்குகிருர்

சென்னை, செப். 13- ஈஞ்சம்பாக்கம் மக்களுக்கு இடைவிடாது பேருந்து வசதியளிக்க செப்டம்பர் 15-ம் தேதிமுதல் சைதாப்பேட்டைக்கும் ஈஞ்சம்பாக்கத்திற்கும் இடையே இரண்டு பேருந்துகள் 19-எச். என்கிற வழித்தட எண்ணுடன்இயக்கப்படும். புயலால் மக்கள் பாதிக்கப்படாமலிருக்க கட்டியுள்ள பாதுகாப்பு இருப்பிடத்தின் திறப்புவிழா ஈஞ்சம்பாக்கத்தில் செப்டம்பர் 14 ஆம் தேதி மாலை 4 மணிக்கு நடைபெற உள்ளது. அப்பொழுது மாண்புமிகு தமிழக முதல்வர் மேற்கூறிய புதிய வழித்தடத்தினைத் துவக்கி வைப்பார்.

# மூக்கையா தேவர் சமாதியில் பி.டி.எஸ்.அஞ்சலி

மதுரை, செப். 13-மூக்கையா தேவர் சமாதியில் மலர் மாலை வைத்து அமைச்சர் பி. டி. எஸ் மரியாதை செலுத்தினர்.

அமைச்சர் பி. டி. எஸ். உசிலம்பட்டிக்கு வந்தார். முத்து.ராமலிங்கத் தேவர் கல்லூரி வளைவுக்குள் உள்ள மூக்கையாதேவரின் சமாதியில் மலர் மாலை வைத்து அவர் மரியாதை செலுத்தினர்.

மதுரை மாநகராட்சி உறுப்பினர் செல்வி எஸ். கே. விஜயா, செக்கானூரணி கழக அவைத் தலைவர் அ. பாண்டியன், அமைப்பாளர் வி. எஸ். முத்து, பொருளாளர் எம். காமத்தேவன், கள்ளிக்குடி பிச்சை ஆகியோரும் அமைச்சருடன் வந்தனர்.

மூக்கையா தேவர் சமாதியில் மரியாதை செலுத்தினர்.

## அம்பத்தூர் நகர கழக தோழர்களுக்கு...

அம்பத்தூர் டன்லப் தொழிற்சாலையின் தொழிற் சங்கத்தில் முக்கிய பொறுப்பு வகித்துவரும் திரு, வேல்முருகன் என்பவருக்கும் அனைத்திந்திய அண்ணா தி. மு, கழகத்திற்கும் எந்தவிதமான தொடர்பும் கிடையாது என்பதைத் தெரிவிப்பதோடு கழகத் தோழர்கள் யாரும் அவரோடு எவ்விதத் தொடர்பும் வைத்துக்கொள்ள வேண்டாமென்றும் கேட்டுக் கொள்கிறேன்.

மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலுடனும் பொதுச் செயளாளர் டாக்டர் நாலவர் அவர்களின் அனுமதியுடனும் இந்த அறிவிப்பு வெளியிடப்படுகிறது.

எச். வி. ஹண்டே எம்.எல்.சி.
அமைப்புச் செயலாளர்,
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்,

சென்னை-14
12-9-79

## காஞ்சி மாவட்ட ஆசிரியர் விளையாட்டுப் போட்டி

சென்னை, செப். 13- திருப்பெரும்புதூர் அரசு உயர்நிலைப் பள்ளியில் "காஞ்சி கல்வி மாவட்ட விளையாட்டுப் போட்டி" நடைபெற்றது.

திருப்பெரும்புதூர் வட்ட விளையாட்டுப் போட்டி, ஆசிரியர்களுக்கான பூப்பந்து போட்டியில் நாயக்கன்பேட்டை அரசு உயர்நிலைப்பள்ளி முதல் இடத்தையும் திருமுடிவாக்கம் அரசு உயர்நிலைப்பள்ளி இரண்டாவது இடத்தையும் பெற்றன.

'அண்ணா'வில் விளம்பரம் செய்து பயன்பெறுங்கள்

# பண்புள்ளவருடன் பழகி இல்வாழ்வை நல்வாழ்வு ஆக்குவீர்

## கவிஞர்இல்லத்திருமணத்தில் மணமக்களுக்கு முதல்வர் அறிவுரை

சென்னை, செப். 13- பண்புள்ளவர்களுடன் பழகி இல்வாழ்வை நல்வாழ்வாக ஆக்குவீர்- பெற்ருேரை தெய்வமாகப் போற்றுவீர் என்று முதல்வர் புரட்சித் தலைவர், கவிஞர் கண்ணதாசன் இல்லத் திருமணத்தில் மணமக்களுக்கு அறிவுரை கூறினர்.

தமிழக அரசுக் கவிஞர் கண்ணதாசன் மகன் சுப்பிரமணியத் திற்கும் (கண்மணி சுப்பு) சிதம்பரம் செட்டியார் மகள் சுலோசனுவிற்கும் நெற்குப்பையில் கடந்த 10 ஆம் தேதி திருமணம் நடைபெற்றது,

திருமண வரவேற்பு சென்னை, தியாகராய நகரில் பாலாஜி திருமண மண்டபத்தில்நேற்றுமாலை நடைபெற்றது.

முதல்வர் புரட்சித் தலைவர் திருமண வரவேற்பு விழாவிற்கு வருகை தந்த போது அரசுக்கவிஞர் கண்ணதாசன் வரவேற்று அழைத்துவந்துஅமரவைத்தார்.

அப்போது இசையமைப்பாளர் எம். எஸ். விஸ்வநாதன் குழுவினரின் மெல்லிசை நிகழ்ச்சி நடைபெற்றுக் கொண்டிருந்தது.

சிறிது நேரம் மெல்லிசை நிகழ்ச்சியைக் கேட்டுக்கொண்டிருந்து விட்டு முதல்வர் புரட்சித்தலைவர் மணமக்களை வாழ்த்திப் பேசினர்.

### பதவியும் பழக்கமும்

"மேடையில் உள்ள இசைக்கலைஞர்கள், இசை வல்லுநர்கள், எனது உடன்பிறப்புகள் போல் பழகியவர்கள். தோள் மீது கை போட்டுப் பழகியவர்கள். இப்போது நான் எங்கோ இருக்கிறேன் என்று என்னைப் பார்த்து சிரிப்பதற்குக்கூட யோசிக்கிருர்கள்.

எந்தப் பதவியாக இருந்தாலும் அது, பழகியவர்களுக்கிடையில் நெருக்கத்தை ஏற்படுத்தத்தான் பயன்படவேண்டுமேதவிர இதுபோன்ற நிலைமையை ஏற்படுத்தக் கூடாது.

மேடையில் உள்ள இசைக் குழுவினர் ஒவ்வொருவர் பெயரும் எனக்குத் தெரியும். ஆனுலும், உதாரணத்திற்கு ஒருவர் பெயரைக்குறிப்பிடுவதால் மற்றவர்களை மறந்து விட்டேன் என்று நினைத்து விடாதீர்கள். கிளாரிநெட் பரமசிவம் போன்றவாகள் நான்இங்குவந்துஅமர்ந்ததும் என்னைப் பார்த்து சிரிப்பதற்குக்கூட யோசிக்கின்ருர்கள். எப்போதும்போல் என்னேடு பழகலாம் என்பதை அவருக்கும் மற்ற நண்பர்களுக்கும் தெரிவித்துக் கொள்கிறேன்.

மணமக்களுக்கு சொல்வது ஒன்றுதான்.

பண்பு உள்ளவர்களை- நல்ல நண்பர்களை அறிந்து அவர்களோடு பழக வேண்டும். நல்லவர்களைத் தான் வீட்டில் அனுமதிக்க வேண்டும்.

பெற்றவர்களைக் கடவுளாக மதியுங்கள். பெரியவர்களை மதிக்கும் பண்பை மணமக்கள் வளர்த்துக் கொள்ளவேண்டும். அது தான் நமக்குபெரியசொத்து.

எவ்வளவுதான் கல்வி கற்றிருந்தாலும் அனுபவம் பெற்ற திறமை மிக்கவர்கள் முன்பு தோற்றுப் போக நேரிடும். ஆகையால் எத்தனைதான் படித்திருந்தாலும் அனுபவம் மிக்க பெரியவர்களை மதித்துப்போற்ற வேண்டும்.

உள்ளொன்று வைத்து புறமொன்று பேசக்கூடியவர்கள் எவ்வளவு பெரிய பதவியில் இருந்தாலும் மனத்தூய்மை உள்ளவர்களை மட்டும் மதியுங்கள்.

வாழ்க்கையில் உயர்ந்த பண்புகளை வளர்க்கும்அனுபவம்பெற வேண்டும்.

மணமக்கள் எல்லா நலனும்பெற்று வளமுடன் வாழ எனதுதாயின் ஆசியுடன் வாழ்த்துகிறேன்.

இவ்வாறு புரட்சித் தலைவர் கூறினர்.

உயர்நீதி மன்ற நீதிபதிகள் கோகுல கிருஷ்ணன், ரத்தினவேல் பாண்டியன், மற்றும் ராஜா சர் முத்தையா செட்டியார், மதியழகன், போலீஸ் ஐ. ஜி. பரமகுரு, ஜேப்பியார் பட அதிபர்கள் எஸ்.எஸ். கருப்பசாமி கே. எஸ். குற்றுலிங்கம், கோவிந்தராஜ், சின்ன அண்ணமலை, திரைப்பட வர்த்தக சபைச் செயலாளர் டி. ராமானுஜம், டைரக்டர்கள் வி. சீனிவாசன் எஸ்.பி. முத்துராமன் பி. சி. கணேசன், நடிகை ஸ்ரீ பிரியா, பி. எஸ். வீரப்பா, மனேகர், ஜி. சீனிவாசன், இளையராஜா ஒளிப்பதிவாளர் விஸ்வநாதன் கமலா திரையரங்கு உரிமையாளர் சிதம்பரம் செட்டியார் மற்றும்ஏராளமான திரையுலகப் பிரமுகர்கள் திருமண வரவேற்பிற்கு வருகை தந்து மணமக்களை வாழ்த்தினர்.

மணமகன் கண்மணி சுப்பு டைரக்டர் கே.பாலசந்தரிடம் உதவி டைரக்டராகப் பல ஆண்டுகள்பணி புரிந்தவர். இப்போது 'அன்புள்ள அத்தான்' என்ற படத்தை டைரக்ட் செய்து வருகிருர்.

வரவேற்பிற்கு வந்தவர்களை அரசுக்கவிஞர் கண்ணதாசன், கலைவாணன் ஆகியோர் வரவேற்றனர்.

எம்.எஸ். விஸ்வநாதன் குழுவினரின் இசை நிகழ்ச்சி நடைபெற்றது.

## வடஆற்காடு மாவட்ட மாணவத் தோழர்களுக்கு

நம்முடையஇதயதெய்வம் புரட்சித் தலைவர் அவர்கள் 14-9-79 அன்று பெரணமல்லூர் சட்ட மன்ற உறுப்பினர் திரு. சந்திரன் அவர்கள் திருமணத்திற்கு செய்யாறு வருகை தருகிருர். வேலூர் நகரில் நடைபெறும் தந்தைபெரியார், பேரறிஞர் அண்ணா அவர்கள் பிறந்த தின விழாவில் கலந்து கொள்ள இருக்கின்ருர்கள்.

மாண்புமிகு முதல்வர் அவர்களுக்கு செய்யாறு நகரிலும், வேலூர் நகரிலும் மாவட்ட மாணவர் அமைப்பின் சார்பாக சிறப்பாக வரவேற்பு அளிக்கப்படுகின்றது. புரட்சித்தலைவரை வரவேற்க தோழர்கள் அனைவரும் அணிதிரண்டு வரக்கோருகிருேம்.

ஏ. சி. சண்முகம், பிஏ. எல்எல். பி,
மாவட்ட மாணவர் அமைப்பாளர்,
வடஆற்காடு மாவட்டம்.

## திருமணம்

செஞ்சி வட்டம் சிறுநாகம் பூண்டி ஏ. கோவிந்தசாமி மகள் தாஸுக்கும் திண்டிவனம் எள. மங்மலம் கிராமம் சின்னசாமி மகள் ரோஸிக்கும் கூட்டுறவுத் துறை அமைச்சர் கே. ஏ. கே. தலைமையில் சென்னை வ. உ. சி. சாலையில்உள்ள மணமகன் வீட்டில் 16.ந் தேதி ஞாயிறு காலை 8 மணிக்கு திருமணம் நடைபெறுகிறது.

★ ★ ★

"அண்ணா" நாளிதழில் பணிபுரியும் கருணாகரனின் சகோதரரும், திருவல்லிக்கேணி எம். கணபதியின் மகனுமான எம். ஜி. மணிக்கும், திருவல்லிக்கேணி கிருஷ்ணசாமி நாயுடுவின் (லேட்) மகள் வரலக்ஷ்மிக்கும் ஞாயிறு 16-ந்தேதி காலை 7-30 மணிக்கு சென்னை வடபழனி கோவிலில் திருமணம் நடைபெறுகிறது.

★ ★ ★

புது வட்டாரம் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக செயலாளர் கா. தயாளனுக்கும், பெருநகர் இராசகோபால்மகன் தெய்வநாயகிக்கும் நல்வாழ்வுத்துறை அமைச்சர் சவுந்தரராசன் தலைமையில் வெள்ளிக்கிழமை 14ந்தேதி காலை 8 மணிக்கு குன்றத்தூர் பள்ளத் தெருவில் திருமணம் நடைபெறுகிறது.

## நெல்லை மாவட்டத்தில் ஜேப்பியார் அடியார் சுற்றுப் பயணம்

22-9-79 அம்பாசமுத்திரம், 23-9-79 பாளையங் கோட்டை மேலப்பாளையம், 24-9-79 கோவில்பட்டி எட்டயபுரம், 25-9-79 திருநெல்வேலி, 26-9-79 சங்கரன் கோயில் புளியங்குடி

இந்த நிகழ்ச்சிகளுக்கான ஏற்பாடுகளை ஆலங்குளம் சட்டமன்ற உறுப்பினர் வி. கருப்பசாமி பாண்டியனும் மாவட்ட எம்.ஜி.ஆர். மன்றச் செயலாளர் ப. இளமதியும் ஏற்பாடு செய்து வருகின்றனர்.

# தேர்தலுக்கு'கண்'சின்னம்

பெங்களூர், செப். 13- வாக்காளர் கண்களை எளிதில் கவரக்கூடிய கண் சின்னத்தை காங்கிரஸ் ஜனதா (எஸ்) ஆகிய கட்சிகளுக்குத் தேர்தல் சின்னமாக வைத்துக்கொள்ளலாம் என்று காங்கிரஸ் மாநாட்டில் அனந்தநாயகி யோசனை கூறினர்.

மாநாட்டில் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் டி. என். அனந்தநாயகிபேசும் போது கூறியதாவது:

தேர்தல் சின்னம் எளிதாக இருக்க வேண்டும். வாக்காளர்களின் கண்களை எளிதில் கவரக்கூடியதாக இருக்க வேண்டும்.

இ. காங்கிரஸ் கட்சியின் "கை" சின்னம் வாக்காளர்களிடையே பிரபலமடைந்ததற்கு இதுவே காரணம்.

எனவே காங்கிரஸ் கட்சியும் ஜனதா (எஸ்) கட்சியும் "கண்" சின்னத்தை தேர்தல் சின்னமாகவைத்துக் கொள்ளலாம.

இவ்வாறு அனந்தநாயகி கூறினர்.

# திருமண அழைப்பு

பேரன்புடையீர்!
வணக்கம்.

நிகழும் சித்தார்த்தி ஆண்டு ஆவணித்திங்கள் 31-ம் நாள் 16-9-79 ஞாயிறு காலை 9 மணியளவில்,

மாண்புமிகு தமிழக முதல்வர் **புரட்சித்தலைவர்** அவர்களின் தலைமையில்

"அண்ணா" நாளிதழ், செய்தி ஆசிரியர் திரு. கார்க்கியின் புதல்வி-செல்வி
**புவனேசுவரிக்கும்**

★

மதுரை, அலங்கார் தியேட்டர் திரு. பி. எஸ். சாஸ்திரியின் புதல்வன்-செல்வன்
**ரவிச்சந்திரனுக்கும்**

சென்னை, ஆள்வார்பேட்டை டாக்டர் ராமசாமி ஐயர் சாலை, (கவிதா) சின்னப்ப தேவர் திருமண மண்டபத்தில் நடைபெறும் திருமண விழாவிற்கு வருகை தந்து மணமக்களை வாழ்த்தி அருளுமாறு வேண்டுகிறேன்.

அன்பன்,
எம். ஜி. சக்கரபாணி

### ★ வாழ்த்துரை நிகழ்ச்சி : ★

தலைமை :
முதல்வர் புரட்சித்தலைவர்

வரவேற்பு :
அமைச்சர் கா. காளிமுத்து

வாழ்த்துரை :
பொதுச்செயலாளர் டாக்டர் நாவலர்
சட்டப்பேரவைத் தலைவர் முனுஆதி

அமைச்சர்கள் :
நாஞ்சிலார், பண்ருட்டி எஸ். ராமச்சந்திரன்,
கே.ஏ. கிருஷ்ணசாமி, எஸ்.டி.சோமசுந்தரம்,
ஆர். எம். வீரப்பன், கே. நாராயணசாமி,
செ. அரங்கநாயகம், எஸ். இராகவானந்தம்
பெ. சௌந்தரபாண்டியன், சி. பொன்னையன்,
ப. குழந்தைவேலு, கே. ராஜாமுகமது,
ஆர். சௌந்தரராசன், செல்வி பி. டி. சரஸ்வதி,
திருமதி சுப்புலட்சுமி,
சிறப்பு பிரதிநிதி க. ராஜாராம்,
திட்டக்குழு துணைத்தலைவர் கோவை செழியன்,
அரசுக் கவிஞர் கவியரசு கண்ணதாசன்,
ப. உ. சண்முகம் எம்.எல்.ஏ.,
ப. முசிறிபுத்தன், எம்.எல்.ஏ. (பேரவைச்செயலர்)
மற்றும் கழக முன்னணியினர்
வாழ்த்துரை வழங்குவர்.

நன்றியுரை : அமைச்சர் ஜி. ஆர். எட்மண்ட்

தங்கள் நல்வரவை அன்புடன் எதிர் நோக்கும்:

கே. கே. சுப்பிரமணியம் மதுரை
எஸ். சண்முகம் (கார்க்கி)
பி. எஸ். சாஸ்திரி
(ஆபரேட்டர் அலங்கார் தியேட்டர், மதுரை),
எஸ். வெங்கட்ராமன்
(கூடுதல் முதல் வகுப்பு நடுவர் நீதிமன்றம் விருதுநகர்)
எஸ். ஜெயந்திநாதன்
(டி. வி. எஸ். ரப்பர் பாக்டரி, மதுரை)
மற்றும் உறவினர்களும் நண்பர்களும்.

குறிப்பு: அழைப்பிதழ் கிடைக்கப் பெருதவர்கள் இதையே அழைப்பாகக் கருதி, மண விழாவில் கலந்துகொண்டு சிறப்பிக்க வேண்டுகிருேம்.

தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275, அவ்வை சண்முகம் சாலை, சென்னை-600 014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனல் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர் பி. தங்கராஜன், 'நவசக்தி' அச்சகம், சென்னை-600 004.

ஆசிரியர்: எம். ஜி. சக்ரபாணி

## தேர்தல் களம்

### தேர்தல் நடக்குமா?

காந்திநகர், செப். 13- நாடாளுமன்ற தேர்தலுடன் குஜராத் சட்டசபை தேர்தலும் நடத்த முடிவுஎடுத்திருப்பதாக குஜராத் முதல்வர் பாபுபாய் பட்டேல் முன்பு கூறி இருந்தார். நாடாளு மன்றத் தேர்தல் எந்தத் தேதியில் நடக்கும் என்று தெரியவில்லை. எனவே நாடாளு மன்றத் தேர்தலுடன் குஜராத் சட்டசபைத்தேர்தலையும் நடத்த வேண்டும் என்ற முடிவை தேர்தல் கமிஷனருக்கு தெரியப்படுத்தவில்லை என்று முதல்வர் பட்டேல் கூறினார். குஜராத் சட்டசபை செப்டம்பர் 17ந் தேதி நடக்கிறது.

அதன்பின் சட்டசபை தேர்தல் பற்றி முடிவு எடுக்கப்படும் என்றும் அவர் கூறினார்.

### சிக்கிம் தேர்தல்

புதுடெல்லி, செப். 13- சிக்கிம் தேர்தலுக்கான வேட்பு மனுக்கள் செப்டம்பர் 19ந்தேதி வரை பெற்றுக் கொள்ளப்படும் என்று தேர்தல் கமிஷன் அறிவித்துள்ளது.

செப்டம்பர் 20ம் தேதி வேட்புமனுக்கள் பரிசீலிக்கப்படும் 22ந்தேதிவாபஸ் பெற கடைசி நாள் அக்டோபர் 12ந் தேதி தேர்தல் நடக்கும்.

### சசிகலாவுக்கு தடையா?

பனஜி, செப். 13 கோவாவில் நடைபெற இருக்கும் சட்டமன்றத் தேர்தலில் போட்டியிட முன்னாள் முதல்வர் சசிகலா ககோத்கருக்குத் தடைபோட வேண்டும் என்று தேர்தல் கமிஷனரை எதிர்க்கட்சித் தலைவர் ஏ. என். நாயக் கேட்டுக்கொண்டார்.

சசிகலா பற்றி தேர்தல் கமிஷனர் ஷத்தாருக்கு நாயக் அனுப்பிய புகாரில் 1. லஞ்ச ஊழலில் ஈடுபட்டதாகவும் 2. நிர்வாக ஊழல், நிதி முறைகேடு ஆகியவற்றில் சம்பந்தப்பட்டிருப்பதாகவும், 3. சட்ட சபையில் அமளியைத் தூண்டி சபாநாயகரைத் தாக்கச் செய்தார் என்றும் குற்றம் சாட்டியுள்ளார்.

---

★ விவசாய தொழிலாளர்களிடம் அதிக நேரம் வேலை வாங்காதே!

# ஆண்-பெண் ஊழியர்க்கு சமமான கூலி

## சிறுவர்களுக்கு முழு சம்பளம் தர வேண்டும்: கழக அரசு உத்தரவு

சென்னை, செப். 13- தமிழகத்தில் விவசாயத் தொழிலாளர்களின் குறைந்த பட்ச கூலிவிகிதத்தை தமிழ்நாடு அரசு இம்மாதம் 15-ஆம் தேதியிலிருந்து மாற்றி அமைத்துள்ளது. இதன்படி விவசாயத் தொழிலாளர்களிடம் அதிக நேரம் வேலை வாங்கக் கூடாது. ஆண் பெண், ஊழியருக்கு சமமான கூலி வழங்க வேண்டும். சிறுவர்களுக்கு முழுச் சம்பளம் தரவேண்டும் என்று கழக அரசு உத்தரவு பிறப்பித்துள்ளது.

தமிழக அரசு புதனன்று வெளியிட்டுள்ளபத்திரிகை குறிப்பில் தெரிவித்திருப்பதாவது:

புதிய கூலி விகிதங்கள்: கிழக்குத் தஞ்சையில் 7 தாலுகாக்கள் தவிர தமிழ் நாடு முழுவதற்கும் இது பொருந்தும். இந்த 7 தாலுகாக்களில் தமிழ்நாடு விவசாய நியாய கூலிச் சட்டம் அமலில் உள்ளது.

### சீரான கூலி

ஆண் பெண் விவசாயத் தொழிலாளர் அனைவருக்கும் ஒரே சீரான கூலி கிடைக்க இப்போது வகை செய்யப்பட்டுள்ளது. குழந்தைகளை விவசாயக் காரியங்களில் ஈடுபடுத்துவதைத் தடுக்கும் வகையில் வயது வராதவர்களுக்கான கூலி விகிதங்களை அரசு நிர்ணயிக்கவில்லை. சிறுவர் சிறுமியர்களை விவசாயப் பணிகளுக்கு அமர்த்தினால் பெரியவர்களுக்கான முழு கூலி விகிதமே தரப்பட வேண்டும்.

விவசாயம், விவசாய உப தொழில்களில் குறைந்த பட்ச கூலி நிர்ணயிப்பதற்காக அரசு நியமித்த கமிட்டியின் அறிக்கையைப் பரிசிலித்த பிறகே இந்த புதிய கூலி விகிதம் நிர்ணயிக்கப் பட்டது.

ரெவின்யூ போர்டுஉறுப்பினர் கே. திரவியம் தலைமையில் அமைக்கப்பட்ட இக்கமிட்டியில் தொழிலாளர்கள் மற்றும் மிராசுதாரர்களின் பிரதிநிதிகள் இடம் பெற்றிருந்தனர்.

### கூலி விகிதம்

மாற்றி யமைக்கப்பட்ட குறைந்தபட்ச கூலிவிகிதம் வருமாறு:

மாடுகளையும் ஏர்களையும் தானே கொண்டு வந்து உழவு நடத்தும் தொழிலாளிக்கு கூலி ரூ12. மாடுகளையும், ஏர்களையும் கொண்டுவராமல் உழவுப் பணி மட்டும் செய்யும் தொழிலாளிக்கு கூலி ரூ.7.

நெல் அறுவடைப் பணியில் (அறுப்பு அடித்து, தூற்றுதல், அளந்து மூட்டை கட்டுதல் முதலியவை) ஈடுபடும் தொழிலாளிக்கு ரூ. 7 அல்லது மொத்த விளைச்சலில் 8-ல் ஒருபாகம் தொழிலாளர் பங்கின் ரொக்க மதிப்பு ஆகிய இரண்டில் எது அதிகமோ அது கூலியாக அமையும்.

நெல் அல்லாத வேறு பயிர்களின் அறுவடைக்கு கூலி 5. பிற விவசாய காரியங்களில் (வரப்புகளையும் வயலையும் சீராக்குதல், மரமேறுதல், தேனீ வளர்த்தல், கோழி வளர்ப்பு, மாட்டுப் பண்ணை) போன்றவைகளில் உள்ளவர்களுக்குக் கூலி ரூ. 7.

மேற்கூறப்பட்ட குறைந்த பட்ச கூலியில் அடிப்படைக் கூலி விகிதம் வாழ்க்கைச் செலவுப்படி. ரொக்க மதிப்பின் சலுகை (ஏதேனுமிருப்பின்) ஆகியவையும் அடங்கும். எனினும் தொழிலாளருக்கு வழங்கப்படும் சாப்பாட்டுக் கட்டணம் (ஏதேனுமிருப்பின்) அது சேர்க்கப்படவில்லை.

எனவேசாப்பாட்டுக் கட்டணத்தை குறைந்தபட்ச கூலியில் பிடித்தம்செய்யக் கூடாது. குறைந்த பட்சக் கூலியை முழுவதும் அல்லது ஒரு பகுதியைத் தானியமாக அளிக்கும்போது அந்தத் தானியத்தின் மதிப்பு ரொக்கமாகத்தரக் கூடிய கூலியின் மதிப்பை விடக் குறையக் கூடாது என்றும் உத்தரவிடப்பட்டுள்ளது.

### 7மணிநேரவேலை

குறைந்தபட்சக் கூலிகள் அமலுக்கு ரெவின்யூ இலாகா பொறுப்பு ஏற்கும்.

உழவு வேலை செய்வோருக்கு 5 மணி நேர வேலையும் பிற எல்லா வகைப் பணிகளுக்கும் 7 மணி நேர வேலையும் நிர்ணயிக்கப் பட்டுள்ளது.

---

# இந்திராவுக்குத் தடை வருமாம்!

## ராஜ்நாராயணன் சொல்கிறார்

பாட்னா, செப். 13 தேர்தலில் நிற்க விடாமல் இந்திராவுக்கு தடை விதிக்கப்படலாம் என்று ராஜ்நாராயணன் கூறினார்.

பாட்னா விமான நிலையத்தில் நிருபர்களுக்கு பேட்டி அளித்த ராஜ்நாராயணன் கூறியதாவது:-

மாருதி விவகாரம் பற்றிய குப்தா கமிஷன் அறிக்கையின்பேரில் தேர்தலில் நிற்க இந்திராகாந்தியைத் தகுதியற்றவராக்குவதற்கு தேர்தல் சட்டத்தை திருத்தும்அவசரச்சட்டம்வராது என்று கூறுவதற்கில்லை.

குப்தா கமிஷன் அறிக்கையின் மீது அடுத்து எடுக்க வேண்டிய நடவடிக்கைகள் குறித்த செயலாளர்கள் கமிட்டி அறிக்கை தாக்கலாகி விட்டது.

அது இந்திராவைப் பாதித்தாலும் சரி, என்னை (ராஜ்நாராயணனை) பாதித்தாலும் சரி, அச்சமோ பாரபட்சமோ இல்லாமல் தனிப்பட்ட பழி வாங்கும் உணர்வு இல்லாமல் சட்டபூர்வமான சகல நடவடிக்கைகளும் எடுத்தாகவேண்டும்.

இவ்வாறு ராஜ்நாராயணன் கூறினார்.

---

### சென்னையில் தடை உத்தரவு

சென்னை, செப். 13- சென்னையில் இன்று 13-ந் தேதி (வியாழன்) முதல் 28-ந் தேதி வரை 15நாட்களுக்கு தடை உத்திரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது. இந்நாட்களில் பொதுக் கூட்டங்களும், ஊர்வலங்களும், போலீசார் அனுமதியின்றிநடத்தக்கூடாது என்று சென்னை நகர் காவல் துறை கமிஷனர் பி. பி ரங்கசாமி தெரிவித்துள்ளார்.

---

"அண்ணா" ஊழியர்

### மோகன்ராஜ் திருமண வரவேற்பு

சென்னை, செப். 13 "அண்ணா" நாளிதழ் நிருபரும், இஞ்சிமூரி பார்த்தசாரதி செட்டியாரின் மகனுமான இ.பி. மோகன் ராஜுக்கும், நந்தம் கன்னையா செட்டியாரின் மகள் தாராபாய்க்கும் கடந்த 9ந் தேதி திருப்பதியில் திருமணம் நடந்தது.

மேற்படி திருமண வரவேற்பு நேற்று (12-ந் தேதி) மாலை மயிலாப்பூர் நாகை பொன்னம்பலம் கல்யாண கூடத்தில் 6 மணிக்கு நடந்தது.

வரவேற்பில் "அண்ணா" அலுவலக ஊழியர்களும், ஏராளமான பத்திரிகையாளர்களும் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

---

### அண்ணாசிலைக்கு பொன்னையன் மாலை அணிவிக்கிறார்

சென்னை, செப். 13- தந்தை பெரியார் நூற்றாண்டு நிறைவு விழாவும் பேரறிஞர் அண்ணா 71-ம் ஆண்டு பிறந்த நாள் விழாவும் அண்ணாநகர் தொகுதி கழகத்தின் சார்பில் வரும் 15-ந் தேதி காலை8மணிக்கு கொண்டாடப்படுகிறது.

அன்று காலை 8 மணிக்கு சான்றோர்பாளையம் (அறிஞர் அண்ணா மருத்துவமனை) அருகில் அமைந்துள்ள பேரறிஞர் அண்ணாவின் சிலைக்கு அமைச்சர் பொன்னையன் மாலை அணிவித்து அண்ணாநகர் தொகுதியில் பல்வேறு வட்டங்களில் கொடியேற்றி வைக்கிறார்.

---

# விவசாயிகள் கேட்ட விலையை விட அதிகம் தரும் கழக அரசு

## அமைச்சர் குழந்தைவேலு தகவல்

பொள்ளாச்சி, செப். 13- மத்திய அரசு நிர்ணயித்த கொள்முதல் விலையை விட 20 ரூபாய் கூடுதலாக தந்து 105 ரூபாய்க்கு அரசு கொள்முதல் செய்ய புரட்சித்தலைவர் உத்தரவிட்டிருக்கிறார். குவிண்டாலுக்கு 100 ரூபாய் போதுமென்ற விவசாய சங்கத்தலைவர்கள் இப்போது 150 ரூபாய் கேட்பது நியாயமா என்று அமைச்சர் குழந்தைவேலு காட்டமாகக் கேட்டார்.

பொள்ளாச்சி ஒழுங்கு முறை விற்பனைக் கூடத்திற்கு 15 லட்சம் ரூபாய் செலவில் புதிதாகக் கட்டிடம் கட்டுவதற்கான கால் கோள் விழா, கிணத்துக்கடவு தொகுதி சட்ட மன்ற உறுப்பினர் கே. வி. கந்தசாமி தலைமையில் நடைபெற்றது.

இவ்விழாவில் புதிய கட்டிடத்திற்கான அடிக்கல்லை நாட்டு வேளாண்மை நீர்ப்பாசனத் துறை அமைச்சர் குழந்தைவேலு கூறியதாவது:-

விவசாயிகள் நலனைக் காக்க வேண்டும் என்ற நல்ல எண்ணத்திலேதான் புரட்சித்தலைவர் நெல்லுக்கும் சாகுபடி செலவுக்கு ஏற்ப குவிண்டால் ரூ. 129.50 வீதம் விலை நிர்ணயிக்க வேண்டும் என்று மத்திய அரசை வற்புறுத்தினார். குவிண்டாலுக்கு100 ரூபாய் தந்தால் போதும் என்று விவசாய சங்கத் தலைவர்கள் கேட்டனர். மத்திய அரசு அந்த அளவில் நெல்லுக்குவிலைநிர்ணயிக்காவிட்டால் என்ன செய்வது என்ற கேள்வி எழுந்தவுடன், விவசாயிகளின் மேல் அன்பும், அக்கறையும் கொண்ட புரட்சித்தலைவர் மத்திய அரசு நிர்ணயிக்கும் விலைக்கு மேல் குவிண்டாலுக்கு ரூ. 20 வீதம் கூடுதலாக தமிழக அரசு கொடுக்கும் என்று கடந்த ஜூன் மாதமே அறிவித்தார். கோதுமைக்கு அதிக விலை நிர்ணயித்த மத்தியஅரசு, மோட்டா ரக நெல்லுக்கு கொள்முதல் விலையை குவிண்டால் ரூ. 85 என்று குறைவாகவே நிர்ணயித்துள்ளது.

ஆனால் சொன்னதைச் செய்யும் புரட்சித் தலைவர் மோட்டா ரக நெல்லை குவிண்டால் ரூ. 105 என-அதாவதுமத்திய அரசு நிர்ணயித்ததற்கு மேல் ரூ, 20 கூடுதலாகக் கொடுத்து-வாங்க வேண்டும் என கடந்த வாரம் ஆணை பிறப்பித்து உள்ளார். இவ்வாறு ஆணை பிறப்பிக்கப்பட்ட பிறகு விவசாயிகள் சங்கத் தலைவர்கள் மோட்டாரக நெல்லுக்கு குவிண்டால் ரூ. 150 என விலை நிர்ணயிக்க வேண்டும் என்று கோரிக்கை எழுப்புவது

(4 ம் பக்கம் பார்க்க)

**சந்தா விவரம்**

| | | | |
|---|---|---|---|
| 1 | வருடச் சந்தா தொகை | ரூ. | 120 |
| 6 | மாதச் சந்தா தொகை | ரூ. | 60 |
| 3 | மாதச் சந்தா தொகை | ரூ. | 30 |

3 மாதத்திற்கு குறைவான சந்தா தொகை ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது.

நிர்வாகி

"அண்ணா"

275, அவ்வை சண்முகம் சாலை, சென்னை-600 014



# அண்ணா




## குழந்தைவேலு தகவல்

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

நியாயமா என்பதை விவசாயிகளாகிய நீங்களே சொல்லுங்கள் என்று கேட்டுக் கொள்கிறேன்,

''மோட்டா ரக நெல்லை குவிண்டால் ரூ. 105 என வாங்க ஆணைப்பிறப்பிக்கப் பட்டதால் வெளி மார்க்கெட்டிலும் நெல்விலை உயர்ந்து விவசாயிகளுக்கு அதிக லாபம் கிடைக்கும் வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. விவசாயிகளின் நலனைக் காப்பதுபோலவே 'கன்ஸ்யூமர்' எனப்படும் நுகர்வோர்களின் நலனையும் காக்க வேண்டிய கடமை அரசுக்கு உள்ளது. விவசாயிகளின் நலன் கருதி நெல்லுக்கு மேலும் அதிக விலை கொடுத்தால், பணம் கொடுத்து அரிசியை வாங்கி உண்ணும் நுகர்வோர்கள் அரிசிக்குமேலும் அதிக விலை கொடுக்க நேரிடும். அந்த நிலை ஏற்பட்டால், அதனால் பாதிக்கப்படப்போவது நுகர்வோர்கள்!

### நுகர்வோர் நலன்

ஆகவே, நெல்லுக்குக் கொள்முதல் விலை நிர்ணயிக்கும்போது நுகர்வோர்களின் நலனையும் கவனிக்க வேண்டியுள்ளதால் மேலும், மேலும் நெல் விலையை உயர்த்திக் கொடுக்குமாறு கோரிக்கை விடுப்பது முறையற்றதாகும். இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு கூறினார்.

### கிராமந்தோறும் பேருந்து

மலையாண்டி கவுண்டனூர் வழியாக கணியூர் செல்லும் பேருந்து வழித்தடத்தை உடுமலைப் பேட்டையில் அமைச்சர் குழந்தைவேலு துவக்கி வைத்தார். அவ்விழாவில் பேசுகையில், கிராமந்தோறும் பேருந்து விடுவதற்குப் புரட்சித்தலைவர் அரசு முயன்றுவருகிறது என்று குறிப்பிட்டார்.





முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் மேலவை கழக உறுப்பினர் அனகாபுத்தூர் ராமலிங்கத்தின் மகள் நாகம்மாளுக்கும், செஞ்சி அனந்தபுரம் ராமசாமியின் மகன் தங்கவேலுவுக்கும் திருமணம் நடைபெற்றது. மணமக்களுடன் புரட்சித்தலைவரும் அவரது துணைவியார் ஜானகி அம்மையாரும் உள்ளனர்.

## திருமண வரவேற்பு

கடந்த 26-8-79 அன்று எம்.எம். ராமு, புஷ்பவல்லி ஆகியோருக்கு நடைபெற்ற திருமணத்தின் வரவேற்பு விழா நாளை 14-9-79 வெள்ளிக்கிழமை மாலை 6 மணிக்கு சின்னமலை பாரிஸ் ஹால் மாதா கோவில் எதிரில் நடைபெறுகிறது.

நிகழ்ச்சிக்கு அமைச்சர் எஸ். ராகவானந்தம் தலைமை வகிக்கிறார். அவைத் தலைவரின் பேரவைச் செயலர் நாஞ்சில் வின்சென்ட் ஜேப்பியார், தலைமை நிலையச் செயலாளர் எம். எஸ். அப்துல்காதர் குடிசை மாற்று வாரியத் தலைவர் பி. ராமசந்திரன் சைதை சா. துரைசாமி, சைதை தமிழ்ச்செல்வன், ஜி. கோவிந்தன் ஏ. வி. ஜெயராமன், டி. யாதவராமன், க. மு. நீலமேகன் அரக்கோணம் அதியமான் மற்றும் பலர் கலந்து கொள்கின்றனர்.



## குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தில் தமிழகத்திற்கு முதலிடம்

சென்னை, செப். 13 கடந்த ஆண்டில் இந்தியாவிலேயே குடும்பக் கட்டுப்பாட்டில் தமிழகம் முதலிடம் வகிக்கிறது.

மாநில அரசாங்க சுகாதார இலாகா செயலாளர் பி. முராரி இத்தகவலைத் தெரிவித்துள்ளார்.

செப்டம்பர் 16ந் தேதி முதல் குடும்பக் கட்டுப்பாடு விழாக்கள் நடைபெறுகிறது என்றும் முராரி கூறினார்.

ஆந்திர மகிள சபை ஏற்பாடு செய்திருந்த குழந்தைகள் சிறப்பு நிகழ்ச்சியில் பி. முராரி, சிவசைலம், சரோஜினி வரதப்பன், டாக்டர் விசாலாட்சி நெடுஞ்செழியன், டாக்டர் எம். நடராசன் ஆகியோர் கலந்துகொண்டு பேசினர்.

தமிழ்நாடு அரசு

வாய்மையே வெல்லும்

# பேரறிஞர் அண்ணா பிறந்தநாள்

## முத்தமிழ் விழா

15-9-1979

சென்னைப் பல்கலைக் கழக நூற்றாண்டு விழா மண்டபம்.

காலை 9.00 மணி: நாதசுரம்

(தமிழ்நாடு அரசு இசைக்கல்லூரி மாணவர்கள்)

காலை 10.00 மணி: ''அண்ணாவின் இயற்றமிழ்''

வரவேற்புரை: டாக்டர் ஒளவை நடராசன்

தலைமை:

மாண்புமிகு மேலவைத் தலைவர் சிலம்புச் செல்வர்

திரு. ம.பொ. சிவஞானம் அவர்கள்

தொடக்க உரை:

மாண்புமிகு சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி

திரு. பி.ஆர். கோகுலகிருஷ்ணன் அவர்கள்

சிறப்புரை:

மாண்புமிகு நிதியமைச்சர்

திரு. கி. மனோகரன் அவர்கள்

அண்ணாவின் இலக்கியக் கட்டுரைகள் — டாக்டர் வ.சுப. மாணிக்கம்

அண்ணாவின் அரசியல் கட்டுரைகள் — பாவலர் திரு. மா. முத்துசாமி

அண்ணாவின் பொருளியல் கட்டுரைகள் — திரு. கு. ராஜவேலு

அண்ணாவின் பேருரைகள் — தவத்திரு குன்றக்குடி அடிகளார்

அண்ணாவின் உவமைநயம் — திரு. டி.கே. சீனிவாசன்

அண்ணாவின் சிறுகதைகள் — திரு. அகிலன்

அண்ணாவின் நெடுங்கதைகள் — திரு. தில்லை வில்லாளன்

அண்ணாவின் நாடக இலக்கியம் —
—மேடை இலக்கியம் — டாக்டர் இரா. சனார்த்தனம், எம்.எல்.சி

அண்ணாவின் நாடக இலக்கியம் :
—திரை இலக்கியம் — திரு. ஏ.எஸ்.ஏ. சாமி



மாலை: 3-30 மணி

''இசைத்தமிழில் அண்ணா''

இசைமணி, இசைஞானபூபதி,

கம்பீரகானமணி சீர்காழி எஸ். கோவிந்தராஜன் குழுவினர்

இசை நிகழ்ச்சி

மாலை: 6.00 மணி:

''அண்ணாவின் நாடகத் தமிழ்''

வரவேற்புரை:

மாண்புமிகு செய்தி, அறநிலையத் துறை அமைச்சர்

திரு. இராம. வீரப்பன் அவர்கள்

தலைமை:

மாண்புமிகு கல்வி அமைச்சர்

திரு. செ. அரங்கநாயகம் அவர்கள்

தமிழ்நாடு அரசு வருவாய் வாரிய உறுப்பினர்

திரு. கா. திரவியம், இ.அ.ப.

அகில இந்திய எழுத்தாளர் சங்க பொதுச்-செயலாளர்

திரு. தீபம் நா. பார்த்தசாரதி

ஆகியோர் உரையாற்றுவார்கள்

மாண்புமிகு முதலமைச்சர்

திரு. எம்.ஜி. இராமச்சந்திரன் அவர்கள்

திரு. ஜெகசிற்பியன் இலக்கியப் பணியைப் பாராட்டி அவர் குடும்பத்தாருக்குத் தமிழ்த்தென்றல் திரு.வி.க. விருது வழங்கி, விழா நிறைவுச் சொற்பொழிவு ஆற்றுவார்கள்

இரவு 7 மணி:

நடிப்பிசைப் புலவர் நாடக மன்றத்தார் அளிக்கும்

பேரறிஞர் அண்ணா அவர்கள் எழுதிய

"நீதிதேவன் மயக்கம்"

இலக்கிய நாடகம் நடைபெறும்.

அனைவரும் வருக.

காலை 8 மணி:

பேரறிஞர் அண்ணா அவர்களின் சிலைக்கு மாண்புமிகு முதல்வர் அவர்கள் மாலையணிவிப்பார்கள்.

இயக்குநர்,

செய்தி,

மக்கள் தொடர்புத்துறை.